# வாக்குண்டாம்

என்னும்

## மூதுரை








கம்பன் தகுதியாக்கப் பள்ளி
கம்பன் மணி மண்டபம்
காரைக்குடி-2.

சின்னம் சிறிய குழந்தைகள்யாம்
சேர்ந்து கல்வி பயிலுகின்ற

தன்னேர் இல்லா எம் கம்பன்
தகுதி யாக்கப் பள்ளி இது

மன்னிப் பொலிந்து பல்லாண்டு
வளர அருள்க என்றுனது

பொன்னுர் கமலத் திருவடியைப்
போற்று கின்ருேம், முழுமுதலே!

அவ்வையார் அருளிய

# வாக்குண்டாம்

என்னும்

# மூதுரை

[உரையுடன்]




**கம்பன் தகுதியாக்கப் பள்ளி**
**கம்பன் மணி மண்டபம்**
**காரைக்குடி–2.**

உரை : கம்பன் அடிப்பொடி
முதற் பதிப்பு—1973


## உள்ளுறை

| | பக்கம் |
|---|---|
| வெளியீட்டுரை | ... 3 |
| வாக்குண்டாம் மூலம் மட்டும் | ... 5 |
| வாக்குண்டாம் மூலமும் உரையும் | ... 11 |
| பிற்சேர்க்கை | ... 31 |

அச்சிட்டோர் :
ஷண்முகம் பிரஸ் பிரைவேட் லிமிடெட்
சென்னை-1.

ஓம்

# வெளியீட்டுரை

அவ்வையார் என்னும் கல்விக்கரசியார் ஆயிரத்து நூறு ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்தவர். முறையாகப் பயிற்றுவிப்பதற்கு என்றே சில பாட நூல்களை ஆக்கி உபகரித்தார். அவை பன்னூறு ஆண்டுகளாகப் பயன் சுரந்து கொண்டிருக்கின்றன.

அவற்றுள் 'ஆத்தி சூடி', 'கொன்றை வேந்தன்' இரண்டையும் உரையுடன் ஒருசேர வெளியிட்டோம். அதைத் தொடர்ந்து, 'வாக்குண்டாம்' என்னும் மூதுரை இப்பொழுது உரையுடன் வெளிவருகிறது.

'ஆத்திசூடி', 'கொன்றை வேந்தன்' போலவே 'வாக்குண்டாம்' என்னும் இந்த நூலும், காப்புச் செய்யுளின் முதலிரண்டு சொற்களையே தன் பெயராகக் கொண்டு திகழ்கிறது. ஆனால் இதற்கு மூதுரை என்ற பெயரும் உண்டு என்பதை உலகம் அறியும்.

இந் நூல் முதற் பகுதியில் மூலத்தை மட்டும் கொண்டிருக்கும். அதை அடுத்த பகுதி மூலமும் உரையுமாக விளங்கும். மூலம் மட்டும் உள்ள பகுதியில், செய்யுள்கள் சீர் பிரித்தும், சந்தி, விகாரங்கள் எதுவும் பிரிக்காமலும், காணப்பெறும். இதனால் வெண்பா யாப்பு முறையை மட்டுமின்றி, மொழிச்சேர்க்கை நெறியையும் புரிந்துகொள்ள இயலும்.

மூலமும் உரையுமாக உள்ள பகுதியில் செய்யுள்கள் யாவும் சீர் பிரிக்காமல், சந்தி விகாரங்களை எல்லாம் பிரித்துச் சொல்லுருவம் நன்கு புலப்படுமாறு அமைக்கப் பெற்றுள்ளன. அதனதன் அடியில் அதனதன் உரை தரப் பெற்றுள்ளது. இதனால் மாணாக்கர்களின் இலக்கண அறிவு வளம்பெறும். மூலப் பகுதிச் செய்யுளையும், உரைப் பகுதிச் செய்யுளையும், ஒப்பு நோக்கிச் சொற்களின் புணர்ச்சி, அதனால் ஏற்படும் தோன்றல், திரிதல், கெடுதல், போன்ற விகாரங்கள் ஆகியவற்றை எளிதாக உணரலாம்.

பயனுள்ள முறையில் கல்வி பயிற்றுவிக்க வேண்டுமென்று தொடங்கப் பெற்ற கம்பன் தகுதியாக்கப் பள்ளி, அவ்வையார் நூல்கள் ஒவ்வொன்றையும் முழுமையாகக் கற்பிக்க முயல்கிறது. இந்த நோக்கம் செவ்விதின் நிறைவேற இறையருளை முற்கொண்டு பள்ளியே சில நூல்களை வெளியிடுகிறது. அவ் வரிசையில் இஃது இரண்டாவதாகும்.

கம்பன் அறநிலையின் அறங்காவலராய் இருந்து பேருதவி புரிந்து வரும் அறப் பெருஞ் செம்மல் கோவை திரு. ஜி. கே. சுந்தரம் அவர்கட்கு, அவர்களின் அறுபதாவது பிறந்த நாளான இன்று இதை அன்புடனும் நன்றிப் பெருக்குடனும் படைக்கிறோம்.

காரைக்குடி
29—5—1973

கம்பன் தகுதியாக்கப் பள்ளி,
கம்பன் மணிமண்டபம்.

ஓம்

அவ்வையார் அருளிய

# ‘வாக்குண்டாம்’ என்னும் மூதுரை

மூலம் மட்டும்

## காப்பு

வாக்குண்டா நல்ல மனமுண்டா மாமலரா
ணேக்குண்டா மேனி நுடங்காது — பூக்கொண்டு
துப்பார் திருமேனித் தும்பிக்கை யான்பாதந்
தப்பாமற் சார்வார் தமக்கு.

## நூல்

நன்றி யொருவற்குச் செய்தக்கா லந்நன்றி
யென்று தருங்கொல் லெனவேண்டா — நின்று
தளரா வளர்தெங்கு தாளுண்ட நீரைத்
தலையாலே தான்றருத லால். 1

நல்லா ரொருவர்க்குச் செய்த வுபகாரம்
கல்மே லெழுத்துப்போற் காணுமே — யல்லாத
வீரமிலா நெஞ்சத்தார்க் கீந்த வுபகாரம்
நீர்மே லெழுத்துக்கு நேர். 2

இன்னா விளமை வறுமைவந் தெய்தியக்கா
லின்னா வளவி லினியவு — மின்னாத
நாளல்லா நாட்பூத்த நன்மலரும் போலுமே
யாளில்லா மங்கைக் கழகு. 3

அட்டாலும் பால்சுவையிற் குன்று தளவளாய்
நட்டாலு நன்பல்லார் நண்பல்லர்
கெட்டாலு மேன்மக்கண் மேன்மக்க ளேசங்கு
சுட்டாலும் வெண்மை தரும். 4

அடுத்து முயன்றாலு மாகுநா ளன்றி
யெடுத்த கருமங்க ளாகா — தொடுத்த
வுருவத்தா னீண்ட வுயர்மரங்க ளெல்லாம்
பருவத்தா லன்றிப் பழா. 5

உற்ற விடத்தி லுயிர்வழங்குந் தன்மையோர்
பற்றலரைக் கண்டாற் பணிவரோ — கற்றூண்
பிளந்திறுவ தல்லாற் பெரும்பாரந் தாங்கிற்
றளர்ந்து வளையுமோ தான். 6

நீரளவே யாகுமா நீராம்பற் றன்கற்ற
நூலளவே யாகுமா நுண்ணறிவு—மேலைத்
தவத்தளவே யாகுமாந் தான்பெற்ற செல்வங்
குலத்தளவே யாகுங் குணம். 7

நல்லாரைக் காண்பதுவு நன்றே நலமிக்க
நல்லார்சொற் கேட்பதுவு நன்றே — நல்லார்
குணங்க ளுரைப்பதுவு நன்றே யவரோ
டிணங்கி யிருப்பதுவு நன்று. 8

தீயாரைக் காண்பதுவுந் தீதே திருவற்ற
தீயார்சொற் கேட்பது வுந்தீதே — தீயார்
குணங்க ளுரைப்பதுவுந் தீதே யவரோ
டிணங்கி யிருப்பதுவுந் தீது. 9

நெல்லுக் கிறைத்தநீர் வாய்க்கால் வழியோடிப்
புல்லுக்கு மாங்கே பொசியுமாந் — தொல்லுலகி
னல்லா ரொருவ ருளரே லவர்பொருட்
டெல்லார்க்கும் பெய்யு மழை. 10

பண்டு முளைப்ப தரிசியே யானாலும்
விண்டுமி போனால் முளையாதாம் — கொண்டபே
ராற்ற லுடையார்க்கு மாகா தளவின்றி
யேற்ற கருமஞ் செயல். 11

மடல்பெரிது தாழை மகிழினிது கந்த
முடல்சிறிய ரென்றிருக்க வேண்டா — கடல்பெரிது
மண்ணீரு மாகா ததனருகே சிற்றூற
லுண்ணீரு மாகி விடும். 12

கவையாகிக் கொம்பாகிக் காட்டகத்தே நிற்கு
மவையல்ல நல்ல மரங்கள் — சவைநடுவே
நீட்டோலை வாசியா நின்றான் குறிப்பறிய
மாட்டா தவனன் மரம். 13

கான மயிலாடக் கண்டிருந்த வான்கோழி
தானு மதுவாகப் பாவித்துத் — தானுந்தன்
பொல்லாச் சிறகைவிரித் தாடினாற் போலுமே
கல்லாதான் கற்ற கவி. 14

வேங்கை வரிப்புலிநோய் தீர்த்த விடகாரி
யாங்கதனுக் காகார மானாற்போற் — பாங்கறியாப்
புல்லறி வாளர்க்குச் செய்த வுபகாரங்
கல்லின்மே லிட்ட கலம். 15

அடக்க முடையா ரறிவில ரென்றெண்ணிக்
கடக்கக் கருதவும் வேண்டா — மடைத்தலையி
லோடுமீ னோட வுறுமீன் வருமளவும்
வாடி யிருக்குமாங் கொக்கு. 16

அற்ற குளத்தி லறுநீர்ப் பறவைபோ
லுற்றுழித் தீர்வா ருறவல்ல — ரக்குளத்திற்
கொட்டியு மாம்பலு நெய்தலும் போலவே
யொட்டி யுறுவா ருறவு. 17

சீரியர் கெட்டாலுஞ் சீரியரே சீரியர்மற்
றல்லாதார் கெட்டாலங் கென்னுகுஞ் — சீரிய
பொன்னின் குடமுடைந்தாற் பொன்னுகு மென்னுகும்
மண்ணின் குடமுடைந்தக் கால். 18

ஆழ வமுக்கி முகக்கினு மாழ்கடனீர்
நாழி முகவாது நானுழி — தோழி
நிதியுங் கணவனு நேர்படினுந் தந்தம்
விதியின் பயனே பயன். 19

உடன்பிறந்தார் சுற்றத்தா ரென்றிருக்க வேண்டா
வுடன்பிறந்தே கொல்லும் வியாதி — யுடன்பிறவா
மாமலையி லுள்ள மருந்தே பிணிதீர்க்கு
மம்மருந்து போல்வாரு முண்டு. 20

இல்லா ளகத்திருக்க வில்லாத தொன்றில்லை
யில்லாளு மில்லாளே யாமாயி — னில்லாள்
வலிகிடந்த மாற்ற முரைக்குமே லவ்வில்
புலிகிடந்த தூருய் விடும். 21

எழுதிய வாறேகா ணிரங்குமட நெஞ்சே
கருதியவா ருமோ கருமங் — கருதிப்போய்க்
கற்பகத்தைச் சேர்ந்தோர்க்குக் காஞ்சிரங்கா யீந்ததேன்
முற்பவத்திற் செய்த வினை. 22

கற்பிளவோ டொப்பர் கயவர் கடுஞ்சினத்துப்
பொற்பிளவோ டொப்பாரும் போல்வரே — விற்பிடித்து
நீர்கிழிய வெய்த வடுப்போல மாறுமே
சீரொழுகு சான்ருேர் சினம். 23

நற்ரு மரைக்கயத்தி னல்லன்னஞ் சேர்ந்தாற்போற்
கற்ருரைக் கற்ருரே காமுறுவர் — கற்பிலா
மூர்க்கரை மூர்க்கர் முகப்பர் முதுகாட்டிற்
காக்கை யுகக்கும் பிணம். 24

நஞ்சுடைமை தானறிந்து நாகங் கரந்துறையு
மஞ்சாப் புறங்கிடக்கு நீர்ப்பாம்பு — நெஞ்சிற்
கரவுடையார் தம்மைக் கரப்பர் கரவார்
கரவிலா நெஞ்சத் தவர். 25

மன்னனு மாசறக் கற்ருேனுஞ் சீர்தூக்கின்
மன்னனிற் கற்ருேன் சிறப்புடையன் — மன்னற்குத்
தன்றேச மல்லாற் சிறப்பில்லை கற்ருேர்க்குச்
சென்றவிட மெல்லாஞ் சிறப்பு. 26

கல்லாத மாந்தர்க்குக் கற்றுணர்ந்தார் சொற்கூற்ற
மல்லாத மாந்தர்க் கறங்கூற்றம் — மெல்லிய
வாழைக்குத் தானீன்ற காய்கூற்றங் கூற்றமே
யில்லிற் கிசைந்தொழுகாப் பெண். 27

சந்தன மென்குறடு தான்றேய்ந்த காலத்துங்
கந்தங் குறைபடா தாதலாற் — றந்தந்
தனஞ்சிறிய ராயினுந் தார்வேந்தர் கேட்டால்
மனஞ்சிறிய ராவரோ மற்று. 28

மருவினிய சுற்றமு வான்பொருளு நல்ல
வுருவு முயர்குலமு மெல்லாந் — திருமடந்தை
யாம்போ தவளோடு மாகு மவள்பிரிந்து
போம்போ தவளோடும் போம். 29

சாந்தனையுந் தீயனவே செய்திடினுந் தாமவரை
யாந்தனையுங் காப்ப ரறிவுடையோர் — மாந்தர்
குறைக்குந் தனையுங் குளிர்நிழலைத் தந்து
மறைக்குமாங் கண்டீர் மரம். 30

மூதுரை வெண்பா முப்பதும் முற்றும்.

ஓம்

அவ்வையார் அருளிய

# வாக்குண்டாம் என்னும் மூதுரை

## மூலமும் — உரையும்

### காப்பு

வாக்கு உண்டாம்; நல்ல மனம் உண்டாம்; மா மலராள்
நோக்கு உண்டாம்; மேனி நுடங்காது; —பூக் கொண்டு,
துப்பு ஆர் திருமேனித் தும்பிக்கையான் பாதம்
தப்பாமல், சார்வார் தமக்கு.

துப்பு ஆர்=பவளம் போலச் சிவந்த; திருமேனி= அழகிய உடம்புடைய; தும்பிக்கையான்= துதிக்கை உள்ள வனுகிய பிள்ளையாரின்; பாதம் = திருவடிகளை; பூக் கொண்டு=மலர்களால்; தப்பாமல்=தவருமல்; சார்வார் தமக்கு= வழிபடுபவர்களுக்கு; வாக்கு உண்டாம்=நல்ல சொல்லாற்றல் ஏற்படும்; நல்ல மனம் உண்டாம்=சிறந்த உள்ளம் ஏற்படும்; மா மலராள்=மேலான தாமரைப் பூவில் வசிப்பவளான திருமகளின்; நோக்கு உண்டாம்= அருள் நோக்கு (கடாட்சம்) ஏற்படும்; மேனி நுடங்காது= உடலுக்கு நோய் நொடியும் வராது.

பிள்ளையார் திருவடிகளை நாள்தோறும் மலர் தூவி வழிபடுபவர்கள், சொல்லாற்றல், உள்ளத் தெளிவு, செல்வ வளம், உடல் நலம் ஆகிய எல்லாம் பெறுவர்.

நன்றி ஒருவற்குச் செய்தக்கால் ''அந் நன்றி
என்று தரும்கொல்'' என வேண்டா; — நின்று
தளரா வளர் தெங்கு தாள் உண்ட நீரைத்
தலையாலே தான் தருதலால். 1

நின்று=நிலைபெற்று; தளரா=குன்றுமல்; வளர்தெங்கு =உயர்கின்ற தென்னையானது; தாள் உண்ட நீரை = அடிவேரால் உறிஞ்சிய வெறும் நீரை; தலையாலே=தன் முடியினுலே; தான்=அம் மரம்; தருதலால்=இளநீராகக் கொடுத்தலால்; ஒருவற்கு=ஒரு நல்லவனுக்கு; நன்றி= ஓர் உதவியை; செய்தக்கால்=செய்தால்; அந் நன்றி= அந்த உதவி; என்று தரும் கொல்=எப்பொழுது திரும்பக் கொடுப்பானே; என வேண்டா = என்று ஐயப்பட வேண்டுவதில்லை.

அடிவேரால் உண்ட வெறும் நீரைத் தென்னை மரம் தலையாலே இளநீராகத் தருகிறது. அதுபோல, நல்லவருக்குச் செய்த ஓர் உதவி உரிய காலத்தில் பன் மடங்கு சிறந்ததாக வந்து சேரும். எனவே, ஐயமின்றி நல்லவர்கட்கு உதவ வேண்டும்.

நல்லார் ஒருவர்க்குச் செய்த உபகாரம்
கல்மேல் எழுத்துப்போல் காணுமே; — அல்லாத
ஈரம் இலா நெஞ்சத்தார்க்கு ஈந்த உபகாரம்
நீர்மேல் எழுத்திற்கு நேர். 2

நல்லார் ஒருவர்க்கு=செம்மையான ஒரு மனிதருக்கு; செய்த உபகாரம்=புரிந்த ஓர் உதவியானது; கல்மேல் எழுத்துப் போல்=கல்லில் வெட்டிய எழுத்தைப் போல; காணும்=நிலைத்து நிற்கும்; அல்லாத = செம்மையற்ற; ஈரம் இலா=பண்பு இல்லாத; நெஞ்சத்தார்க்கு=உள்ளம் உடையவர்க்கு; ஈந்த=செய்த; உபகாரம்=உதவியானது; நீர்மேல்=தண்ணீரின் மேலே; எழுத்திற்கு=எழுதிய எழுத்துக்கு; நேர்=ஒப்பாகும்; அஃதாவது உடனே மறைந்து விடும்.

நல்லவர்க்குச் செய்த உதவி கல்வெட்டைப் போல என்றும் நிலைத்து உலகுக்குப் பயன் தரும். நல்லவர் அல்லாத, பண்பு அற்றவர்க்குச் செய்த உதவி பயன் தராமல் அப்பொழுதே மறைந்து விடும்.

இன்னு, இளமை வறுமை வந்து எய்தியக்கால் ;
இன்னு அளவில், இனியவும்—இன்னுத ;
நாள் அல்லா நாள் பூத்த நல் மலரும் போலுமே,
ஆள் இல்லா மங்கைக்கு அழகு. (3)

இளமை=அனுபவிக்கத் தக்க பருவமான இளமைக் காலத்தில்; வறுமை=செல்வம் இல்லாத வறட்சி நிலை; வந்து எய்தியக்கால்=வந்து சேர்ந்தால்; இன்னு=துன்ப மாகும்; இன்னு அளவில்=பொருந்தாத காலத்தில்; இனியவும்=நல்ல பொருள்களும்; இன்னுத=துன்பம் விளைவிக்கும்; (இவை இரண்டும்) நாள் அல்லா நாள்=திரு நாள் அல்லாத காலத்தில்; பூத்த=மலர்ந்த; நல்மலரும்= நல்ல பூவும்; ஆள் இல்லா=கணவன் இல்லாத; மங்கைக்கு =பெண்ணிற்கு; அழகு=வனப்பும்; போலும்=ஒப்பாகும் (ஏ=அசை)

இளமையில் ஏற்பட்ட தரித்திரமும், துய்க்க முடி யாத காலத்தில் கிட்டிய நல்ல பொருள்களும், காலமற்ற காலத்தில் மலர்ந்த மலரைப் போலவும், கணவன் இல்லாத நங்கையின் அழகைப் போலவும் துன்பம் தரு வன ஆம்.

அட்டாலும் பால் சுவையின் குன்றுது ; அளவளாய்
நட்டாலும், நன்பு அல்லார் நண்பு அல்லர் ;
கெட்டாலும், மேன்மக்கள், மேன்மக்களே ; சங்கு
சுட்டாலும், வெண்மை தரும். (4)

பால்=பாலை; அட்டாலும்=காய்ச்சினுலும்; சுவையின் குன்றுது=அளவில் குறைந்தாலும் இனிமையில் குறை யாது; (அதைப்போல) மேன்மக்கள்=உயர்ந்த குணம்

உள்ளவர்கள்; கெட்டாலும் = செல்வம் முதலியவற்ருல் குறைவுற்ருலும்; மேன்மக்களே = உயர்ந்த குணவான் களாகவே இருப்பார்கள். சங்கு சுட்டாலும் = சங்கை நெருப்பிலிட்டுச் சுட்டுப் பொசுக்கினுலும்; வெண்மை தரும் = (தன் இயல்பான) வெள்ளை நிறத்தையே கொண் டிருக்கும்; (அதைப் போல) அளவளாய் = கூடிக் குலவி; நட்டாலும் = பழகினுலும்; நன்பு அல்லார் = நற்பண்பு— அன்பு இல்லாதவர்கள்; நண்பு அல்லர் = நண்பர்கள் ஆகார்.

வற்றக் காய்ச்சினும் பால் சுவை குறையாததைப் போல, எத்துணைதான் வறுமை நிலை வந்தாலும் உயர்ந்த வர்கள் உயர்ந்தவர்களாகவே இருப்பர்; நெருப்பிலிட்டுப் பொசுக்கினுலும் சங்கு தன் இயல்பான வெண்மை நிறத்தை மாற்றிக் கொள்ளாததைப் போல எவ்வளவு தான் கூடிக் குலவினுலும் பண்பற்ருேர் நண்பர் ஆகார்.

அடுத்து முயன்ருலும், ஆகும் நாள் அன்றி,
எடுத்த கருமங்கள் ஆகா;—தொடுத்த,
உருவத்தால் நீண்ட, உயர் மரங்கள் எல்லாம்
பருவத்தால் அன்றிப் பழா. (5)

தொடுத்த = கிளை பலவற்றுடன் கூடிய; உருவத்தால் நீண்ட = தோற்றத்தால் வளர்ச்சி பெற்ற; உயர் மரங்கள் எல்லாம் = நல்ல பயன் தரும் மரங்களானுலும்கூட; பருவத்தால் அன்றி = முற்றிப்பயன் தரவல்ல காலத்தில் அல்லாமல்; பழா = உரிய வயதுக்கு முன்னே பயன் தராது. (அதைப் போல) அடுத்து முயன்ருலும் = இடைவிடாமல் செயற்பட் டாலும்; ஆகும் நாள் அன்றி = நிறைவேறக் கூடிய காலம் வந்தாலல்லாமல்; எடுத்த கருமங்கள் = தொடங்கிய பணி கள்; ஆகா = நிறைவேறமாட்டா.

எவ்வளவுதான் வளர்ந்தாலும் உரிய காலம் வந்தா லன்றி மரமானது பயன் தர மாட்டாது அதைப் போலவே எத்துணைப் பாடுபட்டாலும் ஆகக் கூடிய காலத்தில்தான் எதுவும் நிறைவேறும்.

உற்ற இடத்தில் உயிர் வழங்கும் தன்மையோர்
பற்றலரைக் கண்டால் பணிவரோ?-கல் தூண்
பிளந்து இறுவது அல்லால், பெரும் பாரம் தாங்கின்
தளர்ந்து வளையுமோ தான் ? (6)

கல் தூண்=கல்லால் ஆன தூண்; தான் பெரும் பாரம் தாங்கின்=அஃது அளவுக்கு மேற்பட்ட சுமையை ஏற்றால்; பிளந்து இறுவது அல்லால்=முறிந்து ஒடிவது அல்லாமல்; தளர்ந்து வளையுமோ ? = ஒசிந்து தாழ்வதுண்டோ ? (அதைப் போல) உற்ற இடத்தில் உயிர் வழங்கும் தன்மையோர்=தம் மானத்திற்குச் சோதனை வந்த சமயத்தில் உயிரையே விடக்கூடிய இயல்பினர்; பற்றலரைக் கண்டால் பணிவரோ?=மாற்றார்களின் பேராற்றலைக் கண்டு அவர்க்கு வணங்கி நிற்பரோ ? மாட்டார். ('ஓ' இரண்டும் எதிர்மறைப் பொருளில் வந்தன.)

மிக்க சுமையை ஏற்ற கல்தூண் எங்ஙனம் வளைந்து கொடுக்கமாட்டாதோ அங்ஙனமே மானிகள் பகைவர்க்குப் பணிய மாட்டார்கள்.

நீர் அளவே ஆகுமாம், நீர் ஆம்பல் ; தான் கற்ற
நூல்அளவே ஆகுமாம், நுண் அறிவு ;—மேலைத்
தவத்து அளவே ஆகுமாம், தான் பெற்ற செல்வம் ;
குலத்து அளவே ஆகும் குணம். (7)

நீர் ஆம்பல்=நீரில் முளைக்கின்ற அல்லிப்பூ ; நீர் அளவே ஆகும்=நீர் மட்ட நிலையிலேதான் இருக்கும்; (அதைப் போலவே) நுண்அறிவு=புத்திக் கூர்மை; தான் கற்ற நூல் அளவே ஆகும்=ஒருவர் படித்துத் தேர்ந்த நூல்களின் தன்மைக் கேற்பவே அமையும்; தான் பெற்ற செல்வம்=ஒருவன் அடைந்துள்ள பொருள்;மேலைத்தவத்து அளவே ஆகும்=முற் பிறப்பில் செய்த புண்ணியத்திற்கு ஏற்பவே வந்து பொருந்தும்; குணம்=ஒருவருடையபண்பு; குலத்து அளவே ஆகும்=அவர் பிறந்த குடியியல்புக்கு ஏற்பவே விளங்கும். (ஆம் மூன்றும் அசை)

நீர் நிலைப்பூ எப்படி நீர் மட்ட நிலையிலேயே இருக்குமோ அப்படியே, ஒருவர் கற்றுத் தேர்ந்த நூல்களின் தரத்திற் கேற்பவே பகுத்தறிவும் —, முற் பிறப்பிற் செய்த தவத்திற் கேற்பவே செல்வ வளமும் —, பிறந்த குடி இயல்புக்கு ஏற்பவே பண்பும் அமையும்.

நல்லாரைக் காண்பதுவும் நன்றே ; நலம் மிக்க
நல்லார் சொல் கேட்பதுவும் நன்றே ;—நல்லார்
குணங்கள் உரைப்பதுவும் நன்றே ; அவரோடு
இணங்கி இருப்பதுவும் நன்று. (8)

நல்லாரை=எண்ணம், சொல், செயல்களால் நன்மையே புரிகின்றவர்களை; காண்பதுவும் நன்று=கண்ணால் காணுவதுகூட நன்மை பயக்கும்; நலம் மிக்க=நன்மை நிறைந்த; நல்லார் சொல் கேட்பதுவும் நன்று=நல்லவர்களின் அறிவுரையைக் கேட்டு நடப்பதும் நன்மை தரும்; நல்லார் குணங்கள் உரைப்பதுவும் நன்று=நல்லவர்களின் குண இயல்பு பற்றிப் பேசுவதும் நலம் புரியும்; அவரோடு இணங்கி இருப்பதுவும் நன்று=அத்தகையவருடன் கருத்து உடன்பட்டு வாழ்வதும் நன்மையே விளைவிக்கும்.

சான்றோரைக் காணுதலும், அவர் உரையைக்கேட்டலும், அவர் குணப் பண்பைப் பற்றிப் பேசுதலும், அவருடன் மனமாரச் சேர்ந்து ஒழுகுதலும் நன்மையே தரும்.

தீயாரைக் காண்பதுவும் தீதே; திரு அற்ற
தீயார் சொல் கேட்பதுவும் தீதே ;—தீயார்
குணங்கள் உரைப்பதுவும் தீதே ; அவரோடு
இணங்கி இருப்பதுவும் தீது. (9)

தீயாரை=நல்லொழுக்கம் இல்லாதவரை; காண்பதுவும்=கண்ணால் காணுவது கூட; தீது=குற்றமாகும்; திரு அற்ற=நற்குணம் இல்லாத; தீயார் =கெட்டவர்களுடைய;

சொல்=உரையை; கேட்பதுவும் தீது=காதால் கேட்பதும் கூடப் பாவமாகும்; தீயார் குணங்கள் உரைப்பதுவும் தீது=கெட்டவர்களின் குண இயல்பைப் பற்றிப் பேசுவதும் தீமை தரும்; அவரோடு இணங்கி இருப்பதுவும் தீது= அத்தகைய கெட்டவர்களுடன் கூடிப் பழகுவதும் கேட்டை விளைவிக்கும். (ஏ மூன்றும் அசை)

ஒழுக்கம் கெட்டவர்களைக் காண்பதும், அவர் பேச்சைக் கேட்பதும், அவர் இயல்பைப் பற்றிப் பேசுவதும், அவரோடு கூடிப் பழகுவதும் துன்பத்தையே தரும்.

நெல்லுக்கு இறைத்த நீர், வாய்க்கால் வழி ஓடிப்
புல்லுக்கும் ஆங்கே பொசியுமாம்—தொல் உலகில்
நல்லார் ஒருவர் உளரேல், அவர் பொருட்டு
எல்லார்க்கும் பெய்யும் மழை. (10)

நெல்லுக்கு இறைத்த நீர்=நெற்பயிருக்குப் பாய்ச்சிய தண்ணீர்; வாய்க்கால் வழி ஓடி=வாய்க்காலின் வழியே சென்று; புல்லுக்கும் ஆங்கே பொசியும்=புல்லுக்கும் அப்படியே கசியும்; (அப்படியே), தொல் உலகில்=இந்தப் பழமையான உலகத்தில்; நல்லார் ஒருவர் உளரேல் = ஒழுக்கத்தால் சிறந்த உத்தமர் ஒருவராவது இருப்பார் ஆனல்; அவர் பொருட்டு=அவரை முன்னிட்டு; மழை= மழையானது; எல்லார்க்கும் பெய்யும் = யாவருக்கும் பொழியும். (ஆம்=அசை)

நெற் பயிருக்குப் பாய்ச்சிய நீரானது எப்படிப் புல்லுக்கும் பயன் தருகிறதோ அப்படியே, நல்லவர் பொருட்டாகப் பெய்யும் மழையும் எல்லோருக்கும் பயன் தரும்.

பண்டு முளைப்பது அரிசியே ஆனாலும்,
விண்டு உமி போனால் முளையாதாம்—கொண்ட பேர்
ஆற்றல் உடையார்க்கும் ஆகாது, அளவு இன்றி
ஏற்ற கருமம் செயல். (11)

பண்=நிலத்தில் (வயலில்); முளைப்பது=முளைவிட்டுத் துளிர்த்துப் பயிராவது; அரிசியே ஆனாலும்=அரிசிதான் என்றாலும்; உமி விண்டு போனால்=உமி நீங்கி விட்டால் முளையாது=முளைக்க மாட்டாது; (அதுபோல), பேர் ஆற்றல் கொண்ட=மிக்க வல்லமை உள்ள; உடையார்க்கும்=செல்வர்களுக்கும்; ஏற்றகருமம்=மேற்கொண்ட பணியை; செயல்=செய்து முடிப்பது; அளவுஇன்றி= துணை இல்லாமல்; ஆகாது=இயலாது. [பண்+து=பண்டு; து=பகுதிப்பொருள் விகுதி; ஆம்=அசை]

அரிசிதான் முளைப்பது என்றாலும் உமியின் துணை இன்றி முளைக்க மாட்டாது; அதைப் போலவே எத்துணை வலிமை உள்ள செல்வர்களானாலும் தக்க துணை இன்றி எதையும் செய்ய முடியாது.

மடல் பெரிது, தாழை ; மகிழ், இனிது, கந்தம் ;
உடல் சிறியர் என்று இருக்கவேண்டா;—கடல் பெரிது ;
மண் நீரும் ஆகாது ; அதன் அருகே சிற்றூறல்
உண் நீரும் ஆகிவிடும். (12)

தாழை=தாழம்பூ; மடல் பெரிது=இதழ்களால் பெரியது (மணமோ குறைந்தது) மகிழ்=மகிழம்பூ (உருவில் சிறியது எனினும்;) கந்தம் இனிது=மணம் சிறந்தது; கடல் பெரிது=சமுத்திரம் ஆழம், நீளம், அகலத்தால் பெரியது; (ஆனால், அதில் உள்ள நீர்) மண் நீரும் ஆகாது=பாத்திரம் கழுவும் நீராகவும் உதவாது; அதன் அருகே=அந்த சமுத்திரத்தின் பக்கத்திலேயே உள்ள; சிற்றூறல்—சிறிய ஊற்றானது; உண் நீரும்=அருந்தக்கூடிய நல்ல நீராகவும்; ஆகிவிடும்=இருக்கக்கூடும்; எனவே, உடல் சிறியர்=உருவத்

தால் சின்னவர்; என்று=எனக்கருதி; இருக்க வேண்டா= மதிக்காமல் இருக்கலாகாது.

பெரிய தாழம்பூவை விடச் சிறிய மகிழம்பூ மணம் மிக்கது; பெரிய கடலை விடச் சிறிய ஊற்று நல்ல நீரைத் தருவது; ஆதலால் உருவத்தைக் கண்டு எவரையும் மதிப்பிடுதல் கூடாது.

கவை ஆகி, கொம்பு ஆகி, காட்டகத்தே நிற்கும்
அவை, அல்ல, நல்ல மரங்கள்;—சவை நடுவே
'நீட்டு' ஓலை வாசியாநின்றான் குறிப்பு அறிய
மாட்டாதவன் நல் மரம். (13)

கவை ஆகி=சிறு கிளைகள் உண்டாகியும்; கொம்பு ஆகி=நீண்ட மரக்கம்புகள் உண்டாகியும்; காட்டகத்தே= காடுகளின் நடுவிலே; நிற்கும் அவை=பயன்படாமல் வளர்ந்து ஓங்கி நிற்கின்ற மரங்கள்; நல்ல மரங்கள் அல்ல= சரியான மரங்கள் ஆக மாட்டா; (ஆனால்) சவை நடுவே= சான்றோர் கூடியுள்ள மன்றத்திலே; 'நீட்டு' ஓலை=நீண்ட பொருளை உணர்த்தும் சுருக்கமான எழுத்துக்களைக் கொண்ட அறிவிப்பை; வாசியாநின்றான் = படித்துக் கொண்டிருப்பவன்படிப்பதிலுள்ள;குறிப்பு=உட்பொருளை; அறிய மாட்டாதவன்=தெரிந்துகொள்ளும் ஆற்றல் இல்லாதவன்தான்; நல் மரம்=சரியான மரம் ஆவான். (ஆநின்று =நிகழ் கால இடைநிலை)

காட்டின் நடுவில் வளர்ந்து ஓங்கி நிற்கும் மரங்கள் சரியான மரங்கள் ஆகா; ஆனால் மக்கள் மத்தியில் மனித உருவத்துடன் இருந்தாலும், 'நீட்டு' போன்ற ஓர் அறிவிப்பை ஒருவன் படிக்கும்போது அதன் உட்பொருளை உணரமுடியாத ஒருவன் தான் அறிவற்ற மரம் ஆவான்.

சவை = சபை (மன்றம்); நீட்டு = நீண்ட உட்பொருளை உடையதும், சங்கேத மொழிகளால் சுருக்க

மாக எழுதப்பட்டதுமான அரசு அனுப்பும் திருமுகம் [அத்திருமுகம் ஓர் ஊருக்கு வந்ததும் அதை முறைப் படி உரிய மரியாதையுடன் கொட்டு முழக்கோடு வர வேற்றுப் பொதுமக்கள் யாவரும் கூடியிருக்கும் ஊர்க் கோயில் அல்லது ஊர்ப் பொது மன்றத்தில் வைத்து மாலை சார்த்தித் தீபாராதனை செய்த பின்னர் அக் கூட்டத்தில் ஊர்க்கணக்கர் அந்த ஓலையைப் பிரித்து எல்லோரும் கேட்கப் படிப்பது பண்டைய மரபு]

கான மயில் ஆட, கண்டிருந்த வான்கோழி
தானும் அதுவாகப் பாவித்து,—தானும் தன்
பொல்லாச் சிறகை விரித்து ஆடினால் போலுமே;
கல்லாதான் கற்ற கவி. (14)

கல்லாதான்=முயன்று உட்பொருளை உணரப் பாடு படாதவன்; கற்ற கவி=மனனம் செய்து கற்றுக்கொண்ட கவிதையை உரைக்கத் தொடங்கினால், அது, கான மயில் ஆட = சோலையில் உள்ள மயிலானது ஆடுவதை; கண்டிருந்த = பார்த்துக் கொண்டிருந்த; வான்கோழி தானும் = வான்கோழியும்; அதுவாகப் பாவித்து = தன்னை மயில்என்று எண்ணிக்கொண்டு; தானும்=அந்த வான்கோழியும்; தன் பொல்லா=தன்னுடைய அழகில் லாத; சிறகை விரித்து = இறகுகளை அகலப் பரப்பி; ஆடினால் போலும்=ஆடுவதை ஒக்கும். (ஏ=அசை)

முயன்று உட்பொருளை அறியும் ஆற்றல் இல்லாத வன் பிறர் கூறக்கேட்டு மனப்பாடம் செய்த கவிதையை உரைக்கத் தொடங்குவது மயிலைப் பார்த்து வான்கோழி ஆடுவது போல நகைப்பிற்கே இடமாகும்.

வேங்கை வரிப் புலிநோய் தீர்த்த விடகாரி
ஆங்கு அதனுக்கு ஆகாரம் ஆனல்போல்—பாங்கு
புல்லறிவாளர்க்குச் செய்த உபகாரம் [அறியாப்
கல்லின்மேல் இட்ட கலம். (15)

வேங்கை=வேங்கை என்னும்; வரிப்புலி=உடம்பில் கோடுகளையுடைய ஒருவகைப் புலியின்; நோய் தீர்த்த விடகாரி=துன்பத்தைப் போக்கிய நச்சு மருத்துவன்; ஆங்கு=அங்கே; அதனுக்கு ஆகாரம் ஆனல் போல்= அந்த வேங்கைப்புலிக்கே உணவாகி விட்டதைப்போன்று; பாங்கு அறியா=நெறிமுறையுணர்வில்லாத; புல்லறி வாளர்க்கு=சிறுமதி உடையவர்கட்கு (கெட்டவர்கட்கு) செய்த உபகாரம்=புரிந்த உதவியானது; கல்லின்மேல் இட்டகலம்=பாறைக்கல்லின்மேல் போட்ட மண்பாண்டம் போலத் தகர்ந்தே போகும்.

தனக்கு விஷவைத்தியம் செய்த விஷவைத் தியனையே ஒரு புலி கொன்று தின்றுவிட்டதாக ஒரு பழம் கதை. பாறைக்கல்லில் போட்ட மட்கலத்தைப் போலக் கெட்டவர்க்குச் செய்த உதவி அழிவையே தரும்.

'அடக்கம் உடையார் அறிவு இலர்' என்று எண்ணிக்
கடக்கக் கருதவும் வேண்டா—மடைத்தலையில்
ஓடு மீன் ஓட, உறு மீன் வரும் அளவும்
வாடி இருக்குமாம் கொக்கு. (16)

கொக்கு=கொக்கு எனும் பறவை; மடைத்தலையில்= நீர் பாய்ந்து செல்லும் மடைவாயில்; ஓடு மீன் ஓட= சென்று கொண்டிருக்கிற மீன்கள் எல்லாம் போய்க்கொண் டிருக்க; உறு மீன்=சரியான பெரு மீன்; வரும் அளவும்= கிட்டி வரும் வரை; வாடியிருக்கும்=தலையைத் தொங்க விட்டுக் கொண்டு (சோர்ந்தது போல) இருக்கும். ஆதலால், அடக்கம் உடையார் = தன்னடக்கத்துடன்

இருப்பவர்களை; அறிவு இலர் என்று எண்ணி=மதிவளம் இல்லாதவர் எனக் கருதி; கடக்கக் கருதவும் வேண்டா= அவர்களை வென்றுவிடலாம் என எண்ணவும் கூடாது. (ஆம்=அசை)

தக்க மீன் வரும் வரைப் படபடக்காமல் கொக்கு அமைதியாக இருக்கும்; அதைப் போல அடங்கியிருப்பவரை ஆற்றல் அற்றவர் என்று கருதி மோதினுல் தீமையே விளையும்.

அற்ற குளத்தில் அறு நீர்ப் பறவை போல்
உற்றுழித் தீர்வார் உறவு அல்லர்—அக் குளத்தில்
கொட்டியும், ஆம்பலும், நெய்தலும், போலவே
ஒட்டி உறுவார் உறவு. (17)

அற்ற குளத்தில் = நீர் வற்றிய குளத்தை விட்டு; அறு=பிரிந்து வேறிடம் செல்கிற; நீர்ப் பறவை போல்= நீர்க்காக்கை முதலிய நீர் வாழ் பட்சிகளைப் போல; உற்றுழித் தீர்வார்=வறுமை வந்த காலத்தில் அகன்று போவார்; உறவு அல்லர்=உறவினர் ஆகார்; அக்குளத்தில்=அதே குளத்தில்; கொட்டியும்=கொட்டிக் கிழங்கும்; ஆம்பலும் = அல்லிக் கொடியும்; நெய்தலும் = சிறு நீல மலர்க்கொடியும்; போலவே = நீர் செழித்த காலத்துத் தாங்களும் செழித்து, நீர் வறண்ட காலத்துத் தாங்களும் வறண்டு விளங்குவதைப் போன்றே; ஒட்டி உறுவார்= இன்ப துன்பம் இரண்டிலும் இணைந்து அனுபவிப்பவர்களே; உறவு=உறவினர் ஆவார்.

நீர் வற்றிய காலத்து நீங்கி வேறிடம் செல்லும் நீர்வாழ் பறவைகளைப் போலத் துன்பம் வந்த காலத்து நீங்கிச் செல்வார் உறவினர் அல்லர். நீர்நிலைத் தாவரத்தைப் போல எப்பொழுதும் உடனிருந்து இன்ப துன்பங்களைப் பகிர்ந்து கொள்வோரே உறவினர்.

சீரியர் கெட்டாலும் சீரியரே ; சீரியர் மற்று
அல்லாதார் கெட்டால் அங்கு என் ஆகும் ?—சீரிய
பொன்னின் குடம் உடைந்தால் பொன் ஆகும் ;
[என் ஆகும் ;
மண்ணின் குடம் உடைந்தக் கால்? (18)

சீரிய = சிறந்த; பொன்னின் = தங்கத்தால் ஆன; குடம் உடைந்தால் = குடமானதுபழுதானுல்;பொன்ஆகும் = மீண்டும் பயன்படக்கூடிய தங்கமாக இருக்கும்; மண்ணின் = மண்ணுல் ஆன; குடம் உடைந்தக்கால் = பழுதுபட்டால்; என் ஆகும் ? = என்ன பயன் தரக்கூடியதாக இருக்கும் ? (அப்படித்தான்) சீரியர் கெட்டாலும் சீரியரே = மேலோர் வறுமை முதலியவற்ருல் நைந்தாலும் மேலோராகவே இருந்து பலருக்கும் பயன்படுவர்; சீரியர் அல்லாதார் = மேன்மக்கள் அல்லாத கீழோர்; கெட்டால் = வறுமைநிலை அடைந்தால்; அங்கு என் ஆகும்? = அப்பொழுது என்ன விளையும் ?

தங்கக் குடம் உடைந்தால் தங்கத்தின் மதிப்பிருக்கும் ! மண்குடம் உடைந்தால் வெறும் ஓட்டாஞ் சல்லிதான். அப்படித்தான் சான்ருேர் வறுமையால் பீடிக்கப்பட்டாலும் சான்ருேராகவே விளங்குவர் ; கீழோர் வறுமைநிலை அடைந்தால் இழிந்தோராகி விடுவர். (மற்று = அசை)

ஆழ அமுக்கி முகக்கினும், ஆழ் கடல் நீர்
நாழி முகவாது, நால் நாழி ;—தோழி !
நிதியும் கணவனும் நேர்படினும், தம்தம்
விதியின் பயனே பயன். (19)

ஆழ்கடல் நீர் = ஆழமான சமுத்திரத்தின் தண்ணீரை; நாழி = ஒருபடியை ; ஆழ அமுக்கி முகக்கினும் = அடி ஆழம் வரை முழுக்கி மொண்டாலும் ; நால் நாழி முகவாது = அது நான்குபடி நீரை மொள்ள மாட்டாது ; (அப்படியே) தோழி = சகியே ! நிதியும் கணவனும் நேர்

படினும் = ஒரு பெண்ணிற்குச் செல்வமும், கொழுநனும் வந்து வாய்த்தாலும் ; தம்தம் = அவரவருடைய ; விதியின் பயனே = ஊழ்வினைக்கேற்ற அளவுதான் ; பயன் = அவற்றை அனுபவிக்கும் வாய்ப்புக் கிட்டும்.

ஆழமான கடலில் அமுக்கி அமுக்கி மொண்டாலும் ஒருபடி நான்கு படி நீரை மொள்ள முடியாது. அதைப் போல, எத்துணைச் செல்வமும், வாழ்க்கைத் துணையும் கிட்டினாலும் முன்னை வினைக்கு ஏற்ற அளவுதான் அவற்றை அனுபவிக்கமுடியும்.

உடன் பிறந்தார் சுற்றத்தார் என்று இருக்க வேண்டா ;
உடன் பிறந்தே கொல்லும் வியாதி—உடன்பிறவா
மா மலையில் உள்ள மருந்தே பிணிதீர்க்கும் ;
அம் மருந்து போல்வாரும் உண்டு. (20)

வியாதி=நோயானது ; உடன் பிறந்தே கொல்லும்= உடம்போடு கூடவே தோன்றி அந்த உடம்பைச் சாகடிக்கும்; உடன் பிறவா மா மலையில் உள்ள மருந்தே=உடம்போடு கூடப் பிறவாத பெருங்குன்றங்களில் உள்ள மூலிகைகளோ; பிணி தீர்க்கும்=நோயை நீக்கும்; அம் மருந்து போல் வாரும் உண்டு=அந்த மூலிகைகளைப்போல விளங்குவோரும் இருக்கிறார்கள். (எனவே) உடன் பிறந்தார்=கூடப் பிறந்தவர்கள் மட்டுமே; சுற்றத்தார் என்று= உறவினர் என; இருக்கவேண்டா=கருதி மயங்க வேண்டாம்.

கூடப் பிறந்தே வியாதி, உடலைச் சாகடிக்கும்; உடன் பிறவா மலையோ மருந்தைத் தந்து அந்த வியாதியையே போக்கடிக்கும் ; அம் மருந்தைப் போன்றவர்களும் இருக்கிறார்கள் ; ஆதலால் கூடப் பிறந்தவர்கள் மட்டுமே உறவினர் என்று கருத வேண்டாம்.

இல்லாள் அகத்து இருக்க, இல்லாதது ஒன்று இல்லை ;
இல்லாளும் இல்லாளே ஆம் ஆயின்,—இல்லாள்
வலி கிடந்த மாற்றம் உரைக்குமேல், அவ் இல்
புலி கிடந்த தூறு ஆய்விடும். (21)

இல்லாள் = நல்ல மனைவி; அகத்து இருக்க = வீட்டில் இருக்கும்பொழுது; இல்லாதது ஒன்று இல்லை = இருக்காத சிறப்பு ஏதும் இல்லை ; இல்லாளும் = அத்தகைய நல்ல மனைவி; இல்லாளே ஆம் ஆயின் = இருக்கவில்லை என்றாலும்; இல்லாள் = மனைவி; வலி கிடந்த மாற்றம் உரைக்குமேல் = திமிர் செறிந்த எதிர் மாறான சொற்களைப் பேசுவாளேயானாலும்; அவ் இல் = அந்தவீடு; புலிகிடந்த தூறு ஆகிவிடும் = வேங்கை வசிக்கும் புதர் ஆகவே இருக்கும்.

நல்ல மனைவி உள்ள வீட்டில் எல்லா நலன்களும் நிறைந்திருக்கும் ; நல்ல மனைவி இல்லாத வீடும், எதிர் மாறாகத் திமிருடன் பேசும் மனைவி வாழும் வீடும், புலிப் புதர்போல ஆகி அவ்வீட்டிற்கு வரவும் மக்கள் அஞ்சுவர்.

எழுதியவாறே, காண், இரங்கும் மட நெஞ்சே!
கருதியவாறு ஆமோ, கருமம் ?—கருதிப் போய்க்
கற்பகத்தைச் சேர்ந்தோர்க்குக் காஞ்சிரங்காய் ஈந்ததேல்
முன் பவத்தில் செய்த வினை. (22)

இரங்கும் மட நெஞ்சே ! = கவலைப்படும் அறியாமை யுள்ள மனமே ! கருதிப்போய் = நல்ல பயனை எண்ணிச் சென்று; கற்பகத்தைச் சேர்ந்தோர்க்கு = கற்பக மரத்தை அடைந்தோர்கட்கு ; காஞ்சிரங்காய் ஈந்ததேல் = எட்டிக் காயை அம்மரம் தந்தால் அது; முன் பவத்தில் செய்த வினை = முன் பிறப்பில் செய்த வினைப்பயன்தான் ; (அதைப் போல) கருமம் = செய்வன; கருதியவாறு ஆமோ ? = எண்ணியபடி நிறைவேறுமா ? ‘ எழுதிய ஆறே (ஆம்) காண்’ = இறைவன் விதித்தபடியேதான் நடக்கும் என்பதைத் தெரிந்துகொள்க.

நல்ல பயனை அடையக் கற்பகத்தை அடைந்தோர்க்கு எட்டிக்காய் கிடைத்தால் அது முன் பிறப்பின் வினைப் பயன்தான். அதைப்போல, எதுவுமே இறைவன் விதிப்படி நடக்குமேயன்றி நாம் விரும்புவதுபோல நடந்து விடாது !

கல் பிளவோடு ஒப்பர், கயவர் ; கடும் சினத்து
பொன் பிளவோடு ஒப்பாரும் போல்வரே; —வில்பிடித்து
நீர் கிழிய எய்த வடுப் போல மாறுமே,
சீர் ஒழுகு சான்றோர் சினம். (23)

கடும் சினத்து=பொல்லாத கோபம் ஏற்பட்டால்; கயவர்=கடைப்பட்டோர்; கல் பிளவோடு ஒப்பர்=கல் துண்டித்ததைப் போல்வர்; (மீண்டும் சேரார்) பொன் பிளவோடு ஒப்பாரும் போல்வர்=தங்கம் துண்டிக்கப் பட்டதைப் போன்றவரும் உள்ளார்; (மீண்டும் பொருத்தலாம்) சீர் ஒழுகு சான்றோர் சினம்=செம்மையாய் வாழும் நல்லவர்களின் கோபமோ, நீர் கிழிய எய்த வடுப்போல மாறும்=விட்ட அம்பு நீரில் ஏற்படுத்திய கீறலைப்போல உடனே மாறிவிடும்.

உத்தமர் கோபம் தானே மாறும் ; மத்திமர் கோபம் மாற்ற மாறும் ; அதமர் கோபம் அகலாதிருக்கும்.

நல் தாமரைக் கயத்தில் நல் அன்னம் சேர்ந்தால்போல்,
கற்றாரைக் கற்றாரே காமுறுவர் ;—கற்பு இலா
மூர்க்கரை மூர்க்கர் முகப்பர் ; முதுகாட்டில்
காக்கை, உகக்கும் பிணம். (24)

நல் தாமரைக் கயத்தில்=உயர்ந்த தாமரைத் தடாகத்தில் ; நல் அன்னம் சேர்ந்தால்போல்=சிறந்த அன்னப் பறவை சென்று அடைவதுபோல; கற்றாரை=கல்வியாளர்களை; கற்றாரே காமுறுவர்=கல்வியுடையவர்களே விரும்புவார்கள்; காக்கை = காகம்; முதுகாட்டில்=சுடுகாட்டில்; பிணம்=பிணத்தை; உகக்கும்=விரும்பும்; (அதைப்போல)

கற்பு இலா = கல்வியறிவற்ற; மூர்க்கரை = அறிவிலிகளை; மூர்க்கர் முகப்பர் = அறிவிலிகளே சென்று சேர்வர்.

தாமரைத் தடாகத்தில் அன்னம் சேருவதைப் போல கற்றறிவாளர்களைக் கற்றறிவாளர் விரும்புவர்; பிணத்தைக் காக்கை விரும்புவதைப் போல மூடர்களை மூடர்கள் விரும்புவர்.

நஞ்சு உடைமை, தான், அறிந்து நாகம் கரந்து உறையும்
அஞ்சாப் புறம் கிடக்கும், நீர்ப் பாம்பு; —நெஞ்சில்
கரவு உடையார் தம்மைக் கரப்பர்; கரவார்
கரவு இலா நெஞ்சத்தவர். (25)

நாகம் = நல்ல பாம்பு; தான் நஞ்சு உடைமை அறிந்து = தன்னிடம் விஷம் உள்ளதை உணர்ந்து; கரந்து உறையும் = மறைந்து வாழும்; நீர்ப்பாம்பு = (விஷம் இல்லாத) தண்ணீர்ப் பாம்போ; அஞ்சாப் புறம் கிடக்கும் = அஞ்சாமல் வெளியே வாழும்; (அதைப்போல) நெஞ்சில் கரவு உடையார் = உள்ளத்தில் வஞ்சம் உள்ளவர்கள்; தம்மைக் கரப்பர் = தம் உண்மை நிலையை மறைத்துக் கபடமாகப் பேசுவர், நடப்பர்; கரவு இலா நெஞ்சத்தவர் = வஞ்சகம் இல்லாத வெள்ளை மனத்தவர்கள்; கரவார் = உள்ளத்தை மறைக்காமல், கபடமின்றி, வெளிப்படையாகவே பேசுவர்; நடப்பார்கள்.

விஷப்பாம்பு மறைந்தும், விஷமில்லாத நீர்ப்பாம்பு வெளிப்பட்டும் கிடப்பதைப் போல வஞ்சகர் தம்மை மறைத்து வாழ, வஞ்சகமில்லாதவர்கள் வெளிப்படவே வாழ்வர்.

மன்னனும் மாசு அறக் கற்றோனும் சீர் தூக்கின்,
மன்னனின், கற்றோன், சிறப்பு உடையன்; மன்னற்குத்
தன் தேசம் அல்லால் சிறப்பு இல்லை; கற்றோற்குச்
சென்ற இடம் எல்லாம் சிறப்பு. (26)

மன்னனும் = அரசனையும்; மாசு அறக் கற்றோனும் = மனக்குற்றம் அகலக் கல்வியறிவைப் பெற்றவனையும்; சீர்

தூக்கின் = கணித்துப் பார்த்தால் ; கற்ரேன் = கல்வியறிவாளன் ; மன்னனின் = அரசனை விட; சிறப்பு உடையன் =பெருமையுடையன் ஆவான் ; காரணம் :— மன்னற்கு= அரசனுக்கு; தன்தேசம் அல்லால்= அவன் ஆளும் நாட்டில் அல்லாமல் பிறநாடுகளில் ; சிறப்பு இல்லை = பெருமை இல்லை ; கற்ரேர்க்கு = கல்வியறிவு உள்ளவனுக்கு ; சென்ற இடம் எல்லாம்சிறப்பு=போன எல்லா நாடுகளிலும் பெருமை உண்டு.

அரசனுக்குத் தன் நாட்டில்தான் செல்வாக்கு முதலிய பெருமை உண்டு. ஆனுல் கற்றறிந்தவனுக்கு எங்குமே செல்வாக்கு முதலிய பெருமை உண்டு. ஆதலால் அதிகாரப் பெருமையைவிடக் கல்விப் பெருமையே மேலானதாகும்.

கல்லாத மாந்தர்க்குக் கற்றுணர்ந்தார் சொல் கூற்றம் ;
அல்லாத மாந்தர்க்கு அறம் கூற்றம்—மெல்லிய
வாழைக்குத் தான் ஈன்ற காய் கூற்றம்; கூற்றமே,
இல்லிற்கு, இசைந்து ஒழுகாப் பெண். (27)

கல்லாத மாந்தர்க்கு=ஒழுக்க நெறியைக் கற்று அதன் படி வாழாத கீழோர்க்கு; கற்றுணர்ந்தார்=(நீதி நெறியைக் கற்றுத் தேர்ந்த) சான்ரேர்களின்; சொல் கூற்றம்=பழிச் சொல்லே எமனுகும்; அல்லாத மாந்தர்க்கு=அறநெறியில் வாழாத மக்களுக்கு; அறம் கூற்றம்=தருமமே எமனுகும். மெல்லிய வாழைக்கு=வயிரமில்லா வாழை மரத்திற்கு; தான் ஈன்ற=அது வெளித் தள்ளிய; காய் கூற்றம்= வாழைக் காய்களே எமனுகும்; இசைந்து ஒழுகாப் பெண் =கணவன் முதலியவர்களுடன் இணங்கி நடவாத ஒரு பெண்மகள்; இல்லிற்கு=மனை வாழ்விற்கு; கூற்றம்= எமனுவாள். (ஏ=அசை)

கீழோர்க்குச் சான்ரேர் பழிச்சொல்லும், பாவிகளுக்குத் தருமமும், வாழைக்கு அதன் தாரும், இல்லற வாழ்வுக்குப் பண்பற்ற மனைவியும் எமன்.

சந்தன மென் குறடு தான் தேய்ந்த காலத்தும்
கந்தம் குறைபடாது ; ஆதலால்,—தம்தம்
தனம் சிறியர் ஆயினும், தார்வேந்தர் கேட்டால்
மனம் சிறியர் ஆவரோ மற்று ? (28)

மென்=இனிய; சந்தனக்குறடு=சந்தனக் கட்டை; தான் தேய்ந்த காலத்தும்=அது அரைக்கப்பட்டு மெலிந்து போன பொழுதும்; கந்தம் குறைபடாது = மணம் குறை யாது; ஆதலால் = ஆகையால்; தார் வேந்தர் = மாலை சூடிய மன்னர்கள்; கேட்டால்=போர் முதலிய அழிவு களாலே; தம்தம் தனம்=அவரவர் செல்வச் செழிப்பிலே; சிறியர் ஆயினும்=குறைந்தவர்கள் ஆனாலும்; மனம்= உள்ளத்து உறுதியிலே; சிறியர் ஆவரோ?=குறைந்தவர் கள் ஆவாரோ? ஆகமாட்டார்! (மற்று=அசை)

சந்தனக் கட்டை தேய்ந்தாலும் மணம் குறையாது; அப்படியே பேரரசர்கள் வளம் குறைந்தாலும் உறுதி தளர மாட்டார்கள்.

மருவு இனிய சுற்றமும், வான் பொருளும், நல்ல
உருவும், உயர் குலமும், எல்லாம்,—திருமடந்தை
ஆம்போது, அவளோடும் ஆகும் ; அவள் பிரிந்து
போம்போது, அவளோடும் போம். (29)

மருவு=நெருங்கி வாழும்; இனிய சுற்றமும் = நல்ல உறவினர்களும், வான் பொருளும் = மிக்க செல்வமும் ; நல்ல உருவும்=பொலிவுள்ள உடல் அமைப்பும்; உயர் குலமும்=மேலான குலப்பெருமையும்; எல்லாம் = ஆகிய யாவும்; திருமடந்தை=இலக்குமிதேவி; ஆம்போது=தங்கி இருக்கும் காலத்தில்; அவளோடும் ஆம் = அவளுடனே தங்கியிருக்கும்; அவள் பிரிந்து போம்போது=அத்திரு மகள் விலகிச் செல்லும் காலத்தில்; அவளோடும் போம்= அவளுடனேயே வெளியேறி விடும்.

உறவினர், செல்வம், உடல் அழகு, குலச்சிறப்பு முதலிய எல்லாம் திருமகள் அருள் இருக்கும் வரையே இருக்கும். எனவே இவை நிலேபேறு அல்ல ;

சாம்தனையும் தீயனவே செய்திடினும், தாம் அவரை
ஆம்தனையும் காப்பர் அறிவு உடையோர் ;—மாந்தர்
குறைக்கும் தனையும் குளிர் நிழலைத் தந்து
மறைக்குமாம் கண்டீர், மரம். (30)

மாந்தர் = மனிதர் ; குறைக்கும் தனையும்— தன் வாது கனை வெட்டி வீழ்த்தும் வரையிலும் ; குளிர் நிழலைத் தந்து = வெட்டுகிற அவர்களுக்கே குளுமையான நிழலைக் கொடுத்து ; மறைக்கும் = வெயிலைத் தடுக்கும் ; (அப்படியே) அறிவு உடையோர் = மெய்யுணர்வு உள்ளவர்கள் ; சாம் தனையும் தீயனவே செய்திடினும் = இறக்கும் வரையும் பிறர் தமக்குத் தீமைகளையே புரிந்திட்டாலும் ; தாம் = அறிவுடையவர்களாகிய அவர்கள் ; அவரை ஆம் தனையும் காப்பர் = தீமை புரிந்தவர்களை தம்மால் முடிந்த வரையும் பாதுகாப்பார்கள், (மறைக்குமாம் என்பதில்) (ஆம்=அசை ; கண்டீர் = முன்னிலைப்படுத்தும் அசைச் சொல்)

எப்படி மரமானது தன்னை வெட்டுவோனுக்கும் நிழல் தந்து அவனை வெயிலிலிருந்து காப்பாற்றுகிறதோ அப்படியே மெய்யறிவு உள்ளவர்கள் தமக்குத் தீங்கு செய்வோரையும் முடிந்தவரைக் காப்பாற்றுவர்.

முதுரை வெண்பா முப்பதின் உரையும்
ஆதி முதல்வன் அருளால் முற்றும்.

# பிற்சேர்க்கை

செட்டிமார் நாட்டில் சென்ற தலைமுறை வரையில், பண்டைய முறையில் தொடக்கப் பள்ளிகள் இயங்கிவந்தன. அவற்றில் அன்றுடம் மாணுக்கர்கட்குப் பாடம் எழுதிக் கொடுக்கப் பெறும். எல்லாம் ஓலைகளிலேதான். அப்படி எழுதிப் போடப்பெறும் பாடங்கள் நெட்டுரு ஆன பின் அடுத்த பாடம் எழுதிப் போடப்பெறும். அத்தகைய பள்ளிகள் சிலவற்றில் "அட்டாலும்" (எண் : 4) என்ற தொடக்கத்து வெண்பா அடியிற் கண்டபடி கற்பிக்கப்பெற்று வந்தன.

" அட்டாலும் பால்சுவையிற் குன்று தளவளாய்
நட்டாலும் நன்பல்லார் நண்பல்லர் — கெட்டாலும்
மேன்மக்கண் மேன்மக்க ளேசங்கு சுட்டாலும்
தான்மிக்க வெண்மை தரும் "

இதில் 'தான்மிக்க' என்ற ஒரு சீர் கூடுவதால் தனிச்சீர் அமைவதுடன் ஈற்றபடி மோனை நயம் பெற்றுச் சிறக்கவும் காண்கிறோம். ஆனல் ஒப்பு நோக்கிய பழைய ஏட்டுச் சுவடிகள் பலவற்றுள் ஒன்றிலும் இப் பாடம் காணப்பெறவில்லை. மேலும் பண்டைய உரையாசிரியர்கள் தனிச்சீர் இல்லாத சவலை வெண்பாவுக்கு இதை எடுத்துக் காட்டியும் உள்ளார்கள். எனவே இப்பதிப்பில் இப்பாடத்தை நாம் கொள்ளவில்லை. என்றாலும் இப்படி ஒரு பாடம் ஒரு பகுதியில் இருந்தது என்பதைப் புலப்படுத்தவே இதைப் பிற்சேர்க்கையில் குறிப் பிடலானேம்.

